30th March 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The National Council of Applied Economic Research has since submitted its report. A 'resume' of the salient features of the report[a] is placed on the table of the House.

(*b*) An expenditure of rupees two lakhs and fifty thousand has been incurred by this Government on the survey.

SRI T. S. RAMASWAMY : இந்த அறிக்கையில் அபிவிருத்தி திட்டத்தின்படி 1,200 கோடி ரூபாய் வருகிற பத்தாண்டுகளில் செலவழிக்க வேண்டும் என்று இருக்கிறது. இப்பொழுது இரண்டு ஐந்தாண்டுத் திட்டத் திற்குள்ளே வரும் திட்டங்களும், இதுவும் ஒன்றுக்கொன்று எப்படி தார தம்மியப்படுகின்றன ? 9-30 a.m.

THE HON. SRI R. VENKATARAMAN : 1,200 கோடி பத்து வருஷத் திற்கு என்றால், அது பப்ளிக் செக்டார், ப்ரைவேட் செக்டார் எல்லாம் சேர்ந்தது. அப்படியென்றால், வருஷத்திற்கு அது சற்றேறக் குறைய 150 அல்லது 160 கோடி நம் ராஜ்யத்தில் இன்னும் அதிகமாகச் செய்யலாம். ப்ரைவேட் செக்டார் வரும் வேகத்தில் அது நடைபெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

SRI S. M. ANNAMALAI : இந்த அறிக்கையில் மற்ற மாநிலங் களின் பர்கேபிடா இன்கம் 261 ரூபாயாக இருக்கும்போது நம் மாநில பர்கேபிடா இன்கம் மட்டும் 227 ரூபாய்தான் என்று சொல் லப்பட்டிருக்கிறதே, அதனால், நம் மாநிலம் மிகவும் பின்தங்கியிருக் கிறது என்பது தெரியவில்லையா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பர்கேபிடா இன்கம் பாபு லேஷனைப் பொருத்தது. அப்படிப் பாபுலேஷனை வைத்துக்கொண்டு பின் தங்கியது என்று சொல்லுவது பொருளாதார தத்துவப்படி சரியான கருத் தல்ல. பர்கேபிடா இன்கம் அதிகரிப்பதைவிட இன்றைக்கு நாஷனல் இன்கம் அதிகரிக்க வேண்டும் என்பதுதான் முக்கிய குறிக்கோள். அது அதிகரித்தால், பாபுலேஷன் அதிகமாக இருந்தால் பர்காபிடா இன்கம் குறையும், பாபுலேஷன் குறைந்தால் பர்கேபிடா இன்கம் அதிகமாகும். ஆகவே, நாஷனல் இன்கம் அதிகரிக்க முயற்சிகள் செய்கிறோம்.

DEPUTY SPEAKER : There are some more questions and I hope the House will permit me to take up and dispose of those questions.

*Mukkulathar.*

* *S.N. Q.* 9—SRI P. K. MOOKIAH THEVAR : கனம் நிதி அமைச் சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) முக்குலத்தாரைப்பற்றி தப்பிதமான கருத்தைத் தருகின்ற தவறான செய்தி 1960-ம் ஆண்டு ஜூலை மாதத்திய "சென்னைச் செய்தி யில்" (Madras Information) வந்துள்ளது அரசினர் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா ?

(இ) அப்படியானால், இச்செய்தியைத் திருத்தும்பொருட்டு எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The article was based on very old publications on the subject. The Government have indicated their view that it was a mistake to have reproduced these ancient writings, which (whether or not they were ever valid) have no relevance to modern life. No further action is considered to be necessary.

---

[a] Printed as Appendix VII on pages 532–539 infra.

[30th March 1961

SRI P. K. MOOKIAH THEVAR : ஸார், இம்மாதிரி அரசாங்கத்தில் ஒரு கொள்கை இருக்கும்போது, தவறுதலாக இப்படி எழுதுவது சரியா ? அப்படி எழுதியவர்மேல் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE Hon. SRI C. SUBRAMANIAM : எழுதியது தவறு என்று சொன்னேன். பழைய காலத்துப் புத்தகங்களை வைத்துக் கொண்டு எழுதியிருக்கிறார்கள். அப்படி எழுதியவர் ரிடயர் ஆகும் வயதை அடைந்தாகிவிட்டது. ஆகவே நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

SRI RAMASAMI THEVAR : அரைக்காசுக்குப் போன மானம் ஆயிரம் பொன் கொடுத்தாலும் திரும்பி வராது. ஒரு கோடி ஜனத் தொகை கொண்ட முக்குலத்தார்களைப் பற்றி மேற்கொண்டும் இப்படி வெளியிடாமல் இருக்க சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதை அநேகம் பேர் படித்து இருக்கமாட்டார்கள்; இப்பொழுது கேள்வி வந்த பிறகுதான் படிப்பார்கள். ஆகவே அதைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். எல்லோரும் ஒற்றுமையாக இருக்கவேண்டும், நாட்டில் ஒற்றுமை நிலவவேண்டும் என்பதற்கு என்னென்ன நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமோ அதை சர்க்கார் என்றைக்கும் எடுக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : தர்ஸ்டன் அவர்களின் இந்த புத்தகத்தின் அடிப்படையில், மேற்கோள் யாரும் காட்டாமல், குறிப்பாக, சர்க்கார் பப்ளிகேஷன்களிலே அந்த புத்தகத்தை மேற்கோள் காட்டாமல் பார்த்துக் கொள்ளுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதில் சொல்லியிருக்கக் கூடிய சில கருத்துக்கள் பண்டைகால ஆராய்ச்சி பற்றி வரும்போது அவசியமிருக்கலாம். ஆனால், தற்போது இருக்கும் நிலைக்கு இது பொருந்தாது; இன்றைக்கு சமுதாயம் வெகுவேகமாக மாறிக்கொண்டு வரும் சமயத்தில், இன்றைக்கு இருக்கக்கூடிய சமுதாயத்திற்கு இது பொருந்தாது. பழைய விஷயங்களை, பழங்காலத்து பழக்க வழக்கங்களை ஆராய்ச்சி செய்ய பயன் படலாம். ஆனால், இக்காலத்தில் பயன்படாது. கேள்விக்குப் பதில், அது உபயோகிக்கப்படமாட்டாது என்று சொல்லுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் அமைச்சர் இப்பொழுது அளித்திருக்கும் உறுதிமொழிப்படி "சென்னைச் செய்தி"யை நடத்த நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் ஆலோசனை கவனிக்கப்படும்.

SRI A. VEDARATHNAM : இம்மாதிரி தவறான கட்டுரைகள் வரும்போது, அதை அச்சிலேற்றுவதற்குள்ளாக, ஆசிரியர்களைக்கொண்டு, குறைகள் இல்லாமல் கவனிக்கக் கூடாதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே ஒவ்வொன்றும் படித்து தவறு, தவறில்லை என்று பார்க்க எந்த ஆசிரியருக்கும் முடியாது. இதை எழுதியிருக்கக்கூடியவர் இந்தத் துறையில் ஒரு நிபுணர் என்ற காரணத்தால் பிரசுரித்திருக்கிறார்கள். கூடியவரைக்கும் தவறுகள் வராமல் பார்த்துக் கொள்ள பொறுப்பு இருக்கிறது.

SRI T. S. RAMASWAMY : May I know whether this is a sociological subject and if so, whether the Government are aware of the fact that anthropologists feel that irrespective of communities, the human society has developed from a sense of promiscuity, polyandry and such other things to the present civilized state?

...

30th March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : நாமெல்லாம் குரங்கி லிருந்து வந்தோம் என்பதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். இப்பொழுது நிலவும் நிலைக்கு, தற்போதைய சமுதாயத்திற்கு அது பொருந்தாது என்று சொல்லுகிறேன்.

SRI K. VINAYAKAM : May I know what is the alleged wrong information which has crept into the book written by Dr. Thurston on the 'Tribes of Southern India'?

THE HON. SRI C. SUBRAMANIAM : The hon. Member may refer to the concerned issue of the "Madras Information".

SRI P. K. MOOKIAH THEVAR : பழங்கால ஆராய்ச்சியை அடிப்படையாக வைத்து, ரிடையராகக் கூடியவர், நிபுணர், ஆதிகாலத்துப் புத்தகத்தை வைத்து எழுதியிருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அந்த ஆதிகாலப் புத்தகத்தை கனம் அமைச்சர் பார்த்தார்களா ? எழுதப்பட்டிருக்கும் முக்குலத்தார் பழக்க வழக்கங்கள் அதிலே அப்படியிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பழையகாலத்துப் பழக்கங்கள் பற்றி இது போன்ற சில கருத்துக்கள் அதில் இருக்கின்றன.

*Tubewells (Pudukkottai)*

* 1207 *Q.*—SRI V. ARUNACHALA THEVAR : Will the Hon. the Minister for Home be pleased to state the number of tubewells that will be sunk in Pudukkottai Division, Tiruchirappalli district, under the Third Five-Year Plan?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Third Five-Year Plan includes schemes for sinking tubewells and sub-artesian wells and, as at present envisaged, it is proposed to sink 150 tubewells and 100 sub-artesian wells in this State during the Plan period. While districtwise targets will be fixed for each year, the selection of sites where the wells will be sunk would, however, have to be made in the course of the actual implementation of the scheme with reference to the availability of underground water-supply, the applications received and other relevant factors. Hence it would not be possible to say now how many wells will be sunk in Pudukkottai Division under the Third Five-Year Plan.

*Leepuram Port*

* 1208 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether there is any proposal to improve the Leepuram Port in the Kanyakumari district;

(*b*) whether the goods in the wrecked ship in the Leepuram Port were auctioned by the Government;

(*c*) the nature of the goods obtained;

(*d*) what was the auction amount;

(*e*) who has bid it in auction;

(*f*) whether all the available materials have been removed from the wrecked ship; and

(*g*) whether this auction was done at the instance of the State Government?